ADI SANKAR[...]ARCH CENTRE

# சாந்தி படனம்

((தமிழ் உரை விளக்கத்துடன்))





பாஷ்ய பாவஜ்ஞ, சாஸ்த்ர யோஜனா சதுர
ப்ரஹ்மஶ்ரீ ஹரகூர் கல்யாணஸுந்தர சாஸ்த்ரிகள்

Published by:
ADI SANKARA ADWAITA RESEARCH CENTRE
26, College Road, Madras – 600 006

# சாந்திபடனம்

(தமிழ் உரை விளக்கத்துடன்)

10 ஷாந்தி மந்திரங்களுடைய

[illegible] ஸ்லோகங்கள்

ஸம்ஸ்க்ருத மூலம் - தமிழ் உரை




பாஷ்யபாவஜ்ஞ, சாஸ்த்ர போதன சதுர

ப்ரஹ்மஸ்ரீ வரகூர் கல்யாணஸுந்தர சாஸ்த்ரிகள்

65/2 பஸுல்லா ரோடு

சென்னை – 600 017

22-2

# நன்றியுரை

"कालः क्रीडति गच्छत्यायुः" என்ற ஸ்ரீ ஆதி சங்கர பகவத் பாதாளின் வசனப்படி, காலவெள்ளத்தில் பல வருடங்கள் சென்று விட்டன. வாழ்க்கையில் பலவிதமான மாறுதல் களுக்கும் துன்பங்களுக்கும் நடுவில் ஸ்ரீ பாஷ்யபாவஜ்ஞ வரகூர் கல்யாணஸுந்தர சாஸ்த்ரிகள் அவர்களிடம் கடந்த 15 ஆண்டுகளாக வேதாந்தச்ரவணம் செய்யும் பாக்யம் பெற்றவர்களில் நானும் ஒருவன் என்பதால் ஏற்படும் பெருமையும் ஆனந்தமும் சொல்லில் அடங்காதவை. சொல்ல வேண்டுமானால்,

"अहो शास्त्रमहो शास्त्रमहो गुरुरहो गुरुः।
अहो ज्ञानमहो ज्ञानमहो सुखमहो सुखम्॥"

என்ற பெரியவர்களுடைய வாக்யங்களைத்தான் சொல்ல முடியும். உலகவாழ்க்கையில் உள்ள இன்பதுன்பங்களை அனுபவித்து, பிரதிதினமும் சலித்துப் போன எங்கள் மனதிற்கு, காலையில் பாஷ்ய ச்ரவணம் செய்கின்ற ஒரு மணி நேரம், த்ரிபுடீ இல்லாத ஸுஷுப்தி-ஆனந்தத்தை விட அதிகம் பயனுடையது என்று கூடச் சொல்லத் தோன்றுகிறது. மோக்ஷத்தை விட பாஷ்யச்ரவணம் செய்யக் கூடிய பாக்யம், सन्तु मे जन्मजन्मनि என்று கூடப் பிரார்த்திக்கத் தோன்றுகிறது.

ஸ்ரீ சாஸ்த்ரிகள் அவர்கள் பாஷ்யப்ரவசனம் செய்கின்றார்கள் என்பதைவிட ஆத்மவித்யையை உபதேசம் செய்கின்றார்கள் என்பதே பொருந்தும். ச்ரவணம் செய்கின்றவர்களின் முகக்குறியைக் கொண்டே அவர்களுக்குத் தோன்றக்கூடிய சந்தேகங்களையும் அவர்கள் சிந்தனைக்கு அப்பாற்பட்ட சந்தேகங்களையும் எழுப்பி, அவைகளுக்கும் விளக்கம் கொடுத்து, அவர்கள் மனதிலே தத்துவத்தைப் படிய வைப்பது ஸ்ரீ சாஸ்த்ரிகள் அவர்களின் தனிச்சிறப்பு. சிஷ்யர்கள் கேட்கும் சந்தேகங்களுக்கு சாஸ்த்ரீய பரிபாஷை யில் பதில் சொல்லி, மேலே போகப் போக விளங்கும் என்ற முறையைக் கையாளாமல், ஒருவாக்யமே நடந்தாலும், அதை மந்த புத்தியுள்ளவர்களுக்கும் விளங்கும்

வகையில் உபதேசம் செய்வதில் ஸ்ரீ சாஸ்த்ரிகள் அவர்களுக்கு நிகரில்லை என்றே சொல்லாம்.

கடந்த 30 வருஷங்களாக உபநிஷத் ஆச்ரமத்தில் விக்னம் இல்லாமல், ஸ்ரீ ஆதிசங்கரருடைய ப்ரஸ்த்தானத்ரய பாஷ்யங்களும், மற்ற வேதாந்த க்ரந்தங்களும், ஸ்ரீ வரகூர் சாஸ்த்ரிகள் மூலமாக, சாந்திபாட புரஸ்ஸரமாகப் படிக்கப்பட்டு வருகின்றன. ஸ்ரீ தேதியூர் சாஸ்த்ரிகள் அவர்களாலேயே ஸ்தாபிக்கப்பட்டிருக்கும் அபிராமபுரம் ஸ்ரீ சங்கர குருகுலத்திலும், விவேகாநந்தர் கல்லூரி, ஸ்ரீராம கிருஷ்ணமடம் போன்ற வேறுபல விடங்களிலும் தற்சமயம் கடந்த பல ஆண்டுகளாக ஸ்ரீ வரகூர் சாஸ்த்ரிகள் அவர்கள் வேதாந்த ப்ரவசனங்கள் செய்து வருகிறார்கள்.

பாஷ்யச்ரவணத்திற்குரிய ஸாதனசதுஷ்டய ஸம்பத்து இல்லாமல் "**उदरनिमित्तं बहुकृतवेषः**" என்று ஆசார்யாளால் பரிஹஸிக்கப்பட்ட நிலையில் உள்ள எங்களுக்கும், அக்குறைகளை அதிகம் பாராட்டாமல், பாஷ்யச்ரவணம் செய்வதில் எங்களுக்கு உள்ள தீவிர ஆர்வத்தை மாத்திரமே அதிகாரஸம்பத்தாக அனுமதித்து பாஷ்ய உபதேசம் செய்து வரும் ஸ்ரீ சாஸ்த்ரிகள் அவர்களுக்கு நாங்கள் என்றென்றும் கடமைப் பட்டிருக்கின்றோம்.

அவ்வப்பொழுது புதிதாக பாஷ்யச்ரவணம் செய்ய வருபவர்களுக்கு, சாந்தி பாட மந்திரங்களை அச்சிட்டு வழங்கவேண்டும் என்ற எண்ணம் தோன்றியது. அர்த்தானுஸந்தானத்துடன் மந்திரங்களைச் சொன்னால்,

"**यदेव विद्यया करोति श्रद्धया उपनिषदा तदेव वीर्यवत्तरं भवति**"

என்ற வசனப்படி, சாந்தி மந்திரங்களுக்கும், மற்ற தியானச்லோகங்களுக்கும், தமிழில் உரையும் விளக்கமும் எழுதித் தரவேண்டும் என்ற எங்கள் வேண்டுகோளுக் கிணங்கி, ஸ்ரீ சாஸ்த்ரிகள் அவர்கள் எழுதிக் கொடுத்த இந்நூல், மிக்க மகிழ்ச்சியுடன், பாஷ்யச்ரவணம் செய்பவர்களின் சார்பில் வெளியிடப் பெறுகின்றது.

யோகாம்பாள் தெரு
தியாகராய நகர்
சென்னை-17

N. C. க்ருஷ்ணன்



பூஜ்யபாத ஸ்ரீ புதுப்பெரியவருடன்
ஸ்ரீ கல்யாணஸுந்தர சாஸ்திரிகள்

# சாந்திபடனம்

## முன்னுரை

' असुर्या नाम ते लोका अन्धेन तमसावृताः ।
तांस्ते प्रेत्याभिगच्छन्ति ये के चात्महनो जनाः ॥ ' (ईश)
' अनन्दा नाम ते लोका अन्धेन तमसावृताः ।
तांस्ते प्रेत्याभिगच्छन्ति अविद्वांसोऽबुधो जनाः ॥ ' (बृह)

இந்த இரண்டு உபநிஷத்மந்த்ரங்களும் ஆத்மாவின் உண்மையான நிலையை அறியாதவர்கள் பேரிருள் சூழ்ந்துள்ள துன்பமயமான இந்த லோகத்தில் ஜீவராசிகளாகத் தோன்றுகிறார்கள் என்று கூறுகின்றன. '**अनित्यमसुखं लोकमिमं प्राप्य भजस्व माम्**' என்பது போன்ற பல வசனங்களும் இக்கருத்தை வலியுறுத்திக் கூறுகின்றன.

' सस्यमिव मर्त्यः पच्यते सस्यमिवाजायते पुनः ' ॥ (कठ)
' स इतः प्रयन्नेव पुनर्जायते ' । (ऐतरेय)
' तानीमानि क्षुद्राण्यसकृदावृत्तीनि भूतानि भवन्ति ।'(छान्दो)
' मर्त्यः स्विन्मृत्युना वृक्णः कस्मान्मूलात्प्ररोहति । ' (बृह)

என்பன போன்ற உபநிஷத்வாக்யங்கள் பிறந்து பிறந்து சாவுதே மனிதர்களின் இயல்பு எனத்தெளிவாகக் கூறுகின்றன. '**जातस्य हि ध्रुवो मृत्युर्ध्रुवं जन्म मृतस्य च**' என்பது போன்ற பல வசனங்களும் இக்கருத்தையே வலியுறுத்தியிருக்கின்றன. இந்த நிலை யாவருக்குமே பொறுக்கவே முடியாத ஒரு நிலை. ஆகவே இதிலிருந்து நம்மைக் காப்பாற்றியே யாகவேண்டும் என்று ஆதிசங்கரபகவத்பாதர் அவர்கள் நமக்காகப் பகவானை வேண்டிக் கொள்ளும் முறையில் அமைந்துள்ள ஒரு ச்லோகத்தை கீழே காணலாம்.

' पुनरपि जननं पुनरपि मरणं पुनरपि जननीजठरे शयनम् ।
इह संसारे बहुदुस्तारे कृपयाऽपारे पाहि मुरारे ॥ '

இத்தகைய இந்த உலகத்தில் நாம் பிறக்காமலிருக்க வேண்டுமானால் இறக்காமலிருக்கவேண்டும். இறக்காம லிருக்கவேண்டுமானால் பிறக்காமலிருக்கவேண்டும். இதற் கான வழி வகைகளை விளக்கமாக எடுத்துக்கூறும் நூல் களே உபநிஷதங்களாகும். அவற்றையே சுருக்கமாக எடுத்துக்கூறும் நூலே பகவத்கீதையாகும். இவை யாவற்றினும் கருத்துக்களை நிர்ணயம் செய்து கொடுப் பவைகளே ப்ரஹ்மஸூத்ரங்களாகும். இவை மூன்றுமே ப்ரஸ்தானத்ரயம் எனப்பெரியோர்களால் வழங்கப்பெற்று வருகின்றன.

இவை அனைத்துக்கும் எங்கும் யாதொரு முரண்பாடு மின்றி விளக்கமாகப் பாஷ்யம் எழுதியுள்ள பெருமை ஆதி சங்கர பகவத் பாதரைத் தவிர வேறு யாருக்கும் இல்லை யென்பதை நிச்சயமாகக் கூறலாம். இந்த பாஷ்யமே ஸ்ரீசங்கரபாஷ்யமெனக் கூறப்படும். இதை ஆசார்ய முகமாக ச்ரவணம் செய்யும்பொழுது சாந்தி பாடத்துடனேயே ச்ரவணம் செய்யவேண்டும் என்பது ஸம்ப்ரதாயமாகும்.

### சாந்திபாடம் என்பது என்ன?

எந்த விதமான தீமையும் நம்மை வந்து அடையாம லிருப்பதற்காகவும் வந்து அடைந்துள்ள தீமைகளும் சாந்தியை யடைவதற்காகவும் நாம் செய்யவேண்டிய பல கார்யங்களுண்டு. அவை சாந்திகர்மா எனப்பொதுவாகக் கூறப்படும். அதுபோல்வே அந்நோக்கதுடனேயே நாம் படிக்கவேண்டிய சில மந்திரங்களுண்டு. அவைகளை நாம் படிப்பதே சாந்தி பாடம் எனப்பொதுவாகக் கூறப்படும்.

ஆத்யாத்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதைவிகம் என வழங்கப்பட்டுவரும் மூவகையான தீமைகளுள் எந்த ஒரு தீமை நம்மை அணுகினாலும் சாந்தமான நிலையில் நாம் பாஷ்ய ச்ரவணம் செய்ய முடியாது. குருசிஷ்யர்களுள் மனவேற்றுமை யிருந்தாலும் பாஷ்ய ச்ரவணம் செய்ய முடியாது. கண், காது, நாக்கு போன்ற நம்முடைய அவயவங்கள் பலஹீனமான நிலையிலிருந்தாலும், வேறு விஷயங்களில் ஈடுபாடு உள்ளவைகளாயிருந்தாலும்,

ஏதேனும் குறைபாடு உள்ளவைகளாயிருந்தாலும் பாஷ்ய ச்ரவணம் செய்யமுடியாது. மனம் போன போக்கில் மனமும், வாய் போன போக்கில் வாக்கும் போய்க் கொண்டிருந்தாலும் பாஷ்ய ச்ரவணம் செய்யமுடியாது. தேவதாப் பிரஸாதம் இல்லாமலிருந்தாலும் பாஷ்ய ச்ரவணம் செய்ய முடியாது. இத்தகைய தீமைகளுள் எதுவும் நம்மை வந்து அடையாமலிருப்பதற்காகப் பெரியோர்களால் ப்ரார்த்தநா ரூபமாக அமைத்துக்கொடுக்கப்பட்டுள்ள மந்திரங்களே சாந்திமந்த்ரங்கள் எனப்படும். இவற்றைப் படித்தால் யாதொருவிதமான தீமையும் நம்மை வந்தடையாது. வந்துள்ள தீமையும் சாந்தியை யடைந்துவிடும். தங்கு தடையேதுமின்றி பாஷ்ய ச்ரவணமும் செய்யமுடியும். ஸகலமான ச்ரேயஸ்ஸையும் நாம் அடையவும் முடியும்.

## சாந்திபாடத்தில் இருப்பவை யாவை?

நான்கு வேதங்களிலிருந்து ஸாரங்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட பத்து மந்திரங்களும், ஆதி சங்கரர் ஸர்வ வேதாந்த ஸாரமாக அமைத்துத் தந்துள்ள ஸ்ரீ தக்ஷிணாமூர்த்யஷ்டகமென வழங்கப்பட்டு வரும் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்திரமும், வேறு சில மகான்களின் வாக்குகளாக அமைந்துள்ள சில ச்லோகங்களுமே இந்த சாந்தி பாடத்துள் அமைந்திருப்பவை.

பத்து சாந்திமந்த்ரங்களுள் 1, 2, 3, 6, 7, 8, 9 ஆன ஏழு மந்த்ரங்கள் ப்ரார்த்தநா ரூபங்களாகவும், 4வது மந்திரம் ஞானத்தைப் பெற்ற த்ரிசங்கு என்னும் ஒரு மகர்ஷியின் அனுபவத்தை எடுத்துக் காட்டுவதாகவும், 5வது மந்திரம் தத்துவ விளக்கமாகவும், 10வது மந்திரம் சரணாகதியைக் கூறுவதாகவும் அமைந்துள்ளன. தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்திரம் என்பது ஞான குருவாக தெற்குநோக்கி ஆல மரத்தினடியில் வீற்றிருக்கும் சிவபெருமானைப் புகழ்ந்து வணங்கும் வகையில் அமைந்துள்ளது. வேறுள்ள சில வசனங்களுள், சில தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்திரங்களாகவும், சில வ்யாஸர், சங்கரர் இவர்களின் பெருமைகளைக் கூறிவணங்கும் வகையிலும், வேறு சில ப்ரஹ்ம வித்யையையும், அதன் குருபரம்பரையையும் பற்றிக் கூறுபவைகளாகவும் அமைந்துள்ளன.

## வேதங்கள் நான்கு, மந்திரங்கள் பத்து - எப்படி?

ருக், யஜுஸ், ஸாம, அதர்வம் எனப் பொதுவாக வேதங்கள் நான்கேயாயினும் யஜுஸ்ஸில் சுக்லம், கிருஷ்ணம் என்று இருவகையுண்டு. ஆகவே வேதங்கள் ஐந்து வகைகளைக் கொண்டுள்ளன. அவற்றுள் ஒவ்வொரு வகைக்கும் ஒவ்வொரு மந்திரம் என்னும் முறையில் ஐந்து மந்திரங்களே மிக முக்கியமான சாந்திமந்திரங்களாகும். 7, 5, 2, 6, 9 ஆன மந்திரங்களே அவைகளாகும். அவற்றுள் **वाङ्मे** எனத்தொடங்கும் மந்திரம் ருக்வேதம். அதிலும் ஐதரேய உபநிஷத்தைச் சார்ந்ததாகும். **पूर्णमदः** எனத் தொடங்கும் மந்திரம் சுக்லயஜுஸ். அதிலும் ஈசாவாஸ்யம், ப்ருஹதாரண்யகம் என்னும் இரு உபநிஷத்துக்களைச் சார்ந்ததாகும். **सह नौ** எனத்தொடங்கும் மந்திரம் கிருஷ்ண யஜுஸ். அதிலும் காடகம், தைத்திரியம் என்னும் இரு உப நிஷத்துகளைச் சார்ந்தாகும். **आप्यायन्तु** எனத் தொடங்கும் மந்திரம் ஸாம. அதிலும் கேனம், சாந்தோக்யம் என்னும் இரு உபநிஷத்துக்களைச் சார்ந்ததாகும். **भद्रं कर्णेभिः** எனத் தொடங்கும் மந்திரம் அதர்வம். அதிலும் ப்ரச்னம், முண்டகம், மாண்டூக்யம் என்னும் மூன்று உபநிஷத்துக்களைச் சார்ந்ததாகும்.

இவைகளே முக்கியமானவை என்னும் கருத்தைப் பிரதிபலித்துக் காட்டும் ஒரு ச்லோகமும் மகாவாக்ய ரத்னாவளி என்னும் நூலில் காண்கிறது. அதாவது,

**वाक् पूर्णसहनाप्यायं भद्रंकर्णेभिरेव च ।**
**पञ्च शान्तीः पठित्वादौ पठेद्वाक्यान्यनन्तरम् ॥**

மற்றுள்ள ஐந்து மந்திரங்களுள், '**शं नः**', '**यश्छन्दसां**' '**अहं वृक्षस्य**' எனத் தொடங்கும் மூன்று மந்திரங்கள் தைத்திரீய உபநிஷத்திலிருந்தும், '**यो ब्रह्माणं**' எனத் தொடங்கும் மந்திரம் ச்வேதாச்வதர உபநிஷத்திலிருந்தும், '**भद्रं नः**' எனத் தொடங்கும் மந்திரம் அதர்வத்திலிருந்தும் எடுக்கப்பட்டவைகளாகும். இவை யாவற்றிற்கும் இவற்றுடன் மங்கள பாட ச்லோகங்களுக்கும் சுருக்கமான முறையில் உரையும் விளக்கமும் இந்நூலில் கொடுக்கப்பட்டுள்ளது. இதைப் படித்து யாவரும் பயனடைவார்கள் என நம்புகிறேன்.

பாஷ்யபாவஜ்ஞ, சாஸ்த்ரபோதனசதுர, ப்ரஹ்மஸ்ரீ
**வரகூர் கல்யாணஸுந்தர சாஸ்திரிகள்**

॥ श्रीः ॥

# भगवत्पादभाष्यश्रवणकाले पठनीयाः शान्तिमन्त्राः

अङ्गवस्त्रेण शरीरमाच्छाद्यैते मन्त्राः पठनीयाः

## पूर्वशान्तिः

शिवनामनि भावितेऽन्तरङ्गे महति ज्योतिषि मानिनीमयार्घे ।
दुरितान्यपयान्ति दूरदूरे मुहुरायान्ति महान्ति मङ्गलानि ॥

स्मृते सकलकल्याणभाजनं यत्र जायते ।
पुरुषस्तमजं नित्यं व्रजामि शरणं हरिम् ॥

## शान्तिमन्त्राः दश

1. ओम्। शं नो मित्रः शं वरुणः। शं नो भवत्वर्यमा। शं न इन्द्रो बृहस्पतिः। शं नो विष्णुरुरुक्रमः। नमो ब्रह्मणे। नमस्ते वायो। त्वमेव प्रत्यक्षं ब्रह्माऽसि। त्वामेव प्रत्यक्षं ब्रह्म वदिष्यामि। ऋतं वदिष्यामि। सत्यं वदिष्यामि। तन्मामवतु। तद्वक्तारमवतु। अवतु माम्। अवतु वक्तारम्। ओं शान्तिः शान्तिः शान्तिः॥

2. ओम्। सह नाववतु। सह नौ भुनक्तु। सह वीर्यं करवावहै। तेजस्वि नावधीतमस्तु। मा विद्विषावहै। ओं शान्तिः शान्तिः शान्तिः॥

3. यश्छन्दसामृषभो विश्वरूपः। छन्दोभ्योऽध्यमृतात्संबभूव। स मेन्द्रो मेधया स्पृणोतु। अमृतस्य देव धारणो भूयासम्। शरीरं मे विचर्षणम्। जिह्वा मे मधुमत्तमा। कर्णाभ्यां भूरि विश्रुवम्। ब्रह्मणः कोशोऽसि मेधया पिहितः। श्रुतं मे गोपाय। ओं शान्तिः शान्तिः शान्तिः॥

4. ओं अहं वृक्षस्य रेरिवा। कीर्तिः पृष्ठं गिरेरिव। ऊर्ध्वपवित्रो वाजिनीव स्वमृतमस्मि। द्रविणँ सवर्चसम्। सुमेधा अमृतोक्षितः। इति त्रिशङ्कोर्वेदानुवचनम्। ओं शान्तिः शान्तिः शान्तिः॥

5. ओं पूर्णमदः पूर्णमिदं पूर्णात्पूर्णमुदच्यते। पूर्णस्य पूर्णमादाय पूर्णमेवावशिष्यते ॥ ओं शान्तिः शान्तिः शान्तिः ॥

6. ओं आप्यायन्तु ममांगानि वाक् प्राणश्चक्षुः श्रोत्रमथो बलमिन्द्रियाणि च सर्वाणि। सर्वं ब्रह्मौपनिषदम्। माहं ब्रह्म निराकुर्यां मा मा ब्रह्म निराकरोत्। अनिराकरणमस्त्वनिराकरणं मे अस्तु। तदात्मनि निरते य उपनिषत्सु धर्मास्ते मयि सन्तु ते मयि सन्तु। ओं शान्तिः शान्तिः शान्तिः ॥

7. ओं वाङ्मे मनसि प्रतिष्ठिता। मनो मे वाचि प्रतिष्ठितम्। आविरावीर्म एधि। वेदस्य म आणीस्थः। श्रुतं मे मा प्रहासीः। अनेनाधीतेन। अहोरात्रान् सन्दधामि। ऋतं वदिष्यामि। सत्यं वदिष्यामि। तन्मामवतु। तद्वक्तारमवतु। अवतु माम्। अवतु वक्तारम्। ओं शान्तिः शान्तिः शान्तिः ॥

8. ओं भद्रं नोऽपि वातय मनः। ओं शान्तिः शान्तिः शान्तिः ॥

9. ओं भद्रं कर्णेभिः शृणुयाम देवाः। भद्रं पश्येमाक्षभिर्यजत्राः। स्थिरैरंगैस्तुष्टुवाँसस्तनूभिः। व्यशेम देवहितं यदायुः। स्वस्ति न इन्द्रो वृद्धश्रवाः। स्वस्ति नः पूषा विश्ववेदाः। स्वस्ति नस्तार्क्ष्यो अरिष्टनेमिः। स्वस्ति नो बृहस्पतिर्दधातु ॥ ओं शान्तिः शान्तिः शान्तिः ॥

10. ओम्। यो ब्रह्माणं विदधाति पूर्वं यो वै वेदांश्च प्रहिणोति तस्मै।
तँह देवमात्मबुद्धिप्रकाशं मुमुक्षुर्वै शरणमहं प्रपद्ये ॥
ओं शान्तिः शान्तिः शान्तिः ॥

ओं नमो ब्रह्मादिभ्यो ब्रह्मविद्यासंप्रदायकर्तृभ्यो वंशऋषिभ्यो नमो महद्भ्यो नमो गुरुभ्यः। सर्वोपप्लवरहितः प्रज्ञानघनः प्रत्यगर्थो ब्रह्मैवाहमस्मि। अधीहि भो भगवः अधीहि भो भगवः ॥

ततो भाष्यपङ्क्तिं किंचित्पठित्वा पठनीयाः

श्रीदक्षिणामूर्त्यष्टकश्लोकाः

प्रतिश्लोकसमाप्ति एकैकः नमस्कारः कर्तव्यः

मौनव्याख्याप्रकटितपरब्रह्मतत्वं युवानं
वर्षिष्ठान्तेवसदृषिगणैरावृतं ब्रह्मनिष्ठैः ।
आचार्येन्द्रङ्करकलितचिन्मुद्रमानन्दमूर्तिं
स्वात्मारामं मुदितवदनं दक्षिणामूर्तिमीडे ॥

विश्वं दर्पणदृश्यमाननगरीतुल्यं निजान्तर्गतं
पश्यन्नात्मनि मायया बहिरिवोद्भूतं यथा निद्रया ।
यस्साक्षात्कुरुते प्रबोधसमये स्वात्मानमेवाद्वयं
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥ १ ॥

बीजस्यान्तरिवाङ्कुरो जगदिदं प्राङ्निर्विकल्पं पुनः
मायाकल्पितदेशकालकलनावैचित्र्यचित्रीकृतम् ।
मायावीव विजृम्भयत्यपि महायोगीव यःस्वेच्छया
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥ २ ॥

यस्यैव स्फुरणं सदात्मकमसत्कल्पार्थगं भासते
साक्षात्तत्वमसीति वेदवचसा यो बोधयत्याश्रितान् ।
यत्साक्षात्करणाद्भवेन्न पुनरावृत्तिर्भवाम्भोनिधौ
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥ ३ ॥

नानाच्छिद्रघटोदरस्थितमहादीपप्रभाभास्वरं
ज्ञानं यस्य तु चक्षुरादिकरणद्वारा बहिःस्पन्दते ।
जानामीति यमेव भान्तमनुभात्येतत्समस्तं जगत्
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥ ४ ॥

देहं प्राणमपीन्द्रियाण्यपि चलां बुद्धिं च शून्यं विदुः
स्त्रीबालान्धजडोपमास्त्वहमिति भ्रान्ता भृशं वादिनः ।
मायाशक्तिविलासकल्पितमहाव्यामोहसंहारिणे
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥ ५ ॥

इतरे श्लोकाः

श्रुतिस्मृतिपुराणानामालयं करुणालयम् ।
नमामि भगवत्पादशङ्करं लोकशङ्करम् ॥

शङ्करं शङ्कराचार्यं केशवं बादरायणम् ।
सूत्रभाष्यकृतौ वन्दे भगवन्तौ पुनः पुनः ॥

नमः श्रुतिशिरःपद्मषण्डमार्तण्डमूर्तये ।
बादरायणसंज्ञाय मुनये शमवेश्मने ॥

ब्रह्मसूत्रकृते तस्मै वेदव्यासाय वेधसे ।
ज्ञानशक्त्यवताराय नमो भगवतो हरेः ॥

शङ्कराश्लेषविलसदानन्दामृतनिर्भराम् ।
विश्वोत्तंसितपादाब्जां ब्रह्मविद्यां विभावये ॥

वेदान्तनिकुरुम्बेण तात्पर्येण प्रकाशितः ।
स्वात्मानन्दैकरस्येन कल्याणाय शिवोऽस्तु नः ॥

नारायणं पद्मभुवं वसिष्ठं शक्तिं च तत्पुत्रपराशरं च ।
व्यासं शुकं गौडपदं महान्तं गोविन्दयोगीन्द्रमथाऽस्य शिष्यम् ॥
श्रीशङ्कराचार्यमथाऽस्य पद्मपादं च हस्तामलकञ्च शिष्यम् ।
त तोटकं वार्तिककारमन्यान् अस्मद् गुरून्सन्ततमानतोऽस्मि ॥

सदाशिवसमारम्भां शङ्कराचार्यमध्यमाम् ।
अस्मदाचार्यपर्यन्तां वन्दे गुरुपरम्पराम् ॥

ततः भाष्यश्रवणं कुर्यात् । अथोत्तरशान्तिः । पूर्ववत्
दशशान्तिमन्त्राः पुनः पठनीयाः ।

ततः पठनीयाः श्रीदक्षिणामूर्त्यष्टकश्लोकाः ॥

राहुग्रस्तदिवाकरेन्दुसदृशो मायासमाच्छादनात्
सन्मात्रः करणोपसंहरणतो योऽभूत्सुषुप्तः पुमान् ।
प्रागस्वाप्समिति प्रबोधसमये यः प्रत्यभिज्ञायते
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥ ६ ॥

बाल्यादिष्वपि जाग्रदादिषु तथा सर्वास्ववस्थास्वपि
व्यावृत्तास्वनुवर्तमानमहमित्यन्तः स्फुरन्तं सदा ।
स्वात्मानम्प्रकटीकरोति भजतां यो भद्रया मुद्रया
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥ ७ ॥

विश्वं पश्यति कार्यकारणतया स्वस्वामिसम्बन्धतः
शिष्याचार्यतया तथैव पितृपुत्र्याद्यात्मना भेदतः ।
स्वप्ने जाग्रति वा य एष पुरुषो मायापरिभ्रामितः
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥ ८ ॥

भूरम्भांस्यनलोऽनिलोऽम्बरमहर्नाथो हिमांशुः पुमान्
इत्याभाति चराचरात्मकमिदं यस्यैव मूर्त्यष्टकम् ।
नान्यत्किंचन विद्यते विमृशतां यस्मात्परस्माद्विभोः
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥ ९ ॥

सर्वात्मत्वमिति स्फुटीकृतमिदं यस्मादमुष्मिंस्तवे
तेनास्य श्रवणात्तदर्थमननाद्ध्यानाच्च सङ्कीर्तनात् ।
सर्वात्मत्वमहाविभूतिसहितं स्यादीश्वरत्वं स्वतः
सिध्येत्तत्पुनरष्टधा परिणतं चैश्वर्यमव्याहतम् ॥ १० ॥

वटविटपिसमीपे भूमिभागे निषण्णं
सकलमुनिजनानां ज्ञानदातारमारात् ।
त्रिभुवनगुरुमीशं दक्षिणामूर्तिदेवं
जननमरणदुःखच्छेददक्षं नमामि ॥

चित्रं वटतरोर्मूले वृद्धाश्शिष्या गुरुर्युवा ।
गुरोस्तु मौनं व्याख्यानं शिष्यास्तु छिन्नसंशयाः ॥

अङ्गुष्ठतर्जनीयोगमुद्राव्याजेन देहिनाम् ।
श्रुत्यर्थं ब्रह्मजीवैक्यं दर्शयन्नोऽवताच्छिवः ॥

इतरे श्लोकाः

ओं नमः प्रणवार्थाय शुद्धज्ञानैकमूर्तये ।
निर्मलाय प्रशान्ताय दक्षिणामूर्तये नमः ॥

गुरवे सर्वलोकानां भिषजे भवरोगिणाम् ।
निधये सर्वविद्यानां दक्षिणामूर्तये नमः ॥

चिद्घनाय महेशाय वटमूलनिवासिने ।
सच्चिदानन्दरूपाय दक्षिणामूर्तये नमः ॥

शान्तिपाठः समाप्तः ॥

## अथ मङ्गलपाठः ।

मङ्गलपाठः महाप्रदोषदिवसे प्रातः कर्तव्यः । उत्तरशान्तिमन्त्रपठनानन्तरं प्रतिमायां पुस्तकमण्डले वा सशिष्यं श्रीशंकरभगवत्पादमावाह्य यथाविधि सम्पूज्य इमे श्लोकाः पठनीयाः ।

[सश्वेतसर्षपं समधु च दधि दूर्वातृणञ्च विशिष्यात्र निवेदानार्हम् ॥]

### मङ्गलपाठश्लोकः ।

१ अशुभानि निराचष्टे तनोति शुभसन्ततिम् ।
स्मृतिमात्रेण यत्पुंसां ब्रह्म तन्मङ्गलं परम् ॥

२ अतिकल्याणरूपत्वान्नित्यकल्याणसंश्रयात् ।
स्मर्तॄणां वरदत्वाच्च ब्रह्म तन्मङ्गलं परम् ॥

३ ओङ्कारश्चाथशब्दश्च द्वावेतौ ब्रह्मणः पुरा ।
कण्ठं भित्वा विनिर्यातौ तस्मान्माङ्गलिकावुभौ ॥

ओं अथ, ओं अथ, ओं अथ ।

मङ्गलपाठः समाप्तः ।

अतः परमेव 'राहुग्रस्त' इत्याद्याः श्लोकाः सनमस्कारं पठनीयाः ।

श्रीः

## சாந்தி படன மந்திரம் முதலானவைகளுக்கு பாஷ்யபாவஜ்ஞ ப்ரஹ்மஸ்ரீ வரகூர் கல்யாணஸுந்தர சாஸ்திரிகள் எழுதிய உரையும் விளக்கமும்

மேல் வஸ்திரத்தால் உடம்பை மறைத்துக்கொண்டு சாந்தி மந்திர படனம் செய்யவேண்டும்.

### பூர்வ சாந்தியின் தொடக்கம்

**शिवनामनि भाविते॑ऽन्तरङ्गे महति ज्योतिषि मानिनीमयार्धे।**
**दुरितान्यपयान्ति दूरदूरे मुहुरायान्ति महान्ति मङ्गलानि॥**

அர்த்த நாரீச்வர ரூபராயும் ஸ்வயஞ்ஜ்யோதிஸ்வரூபராயுமுள்ள பரமேச்வரனை மனதினுள் அடிக்கடி தியானஞ் செய்தால் நம்முடைய எல்லா பாபங்களும் நம்மை விட்டு வெகு தூரத்திற்கு அப்பால் விலகிவிடும். பெரிய க்ஷேமங்கள் எல்லாம் நம்மை வந்தடையும்.

**स्मृते सकलकल्याणभाजनं यत्र जायते।**
**पुरुषस्तमजं नित्यं व्रजामि शरणं हरिम् ॥**

எந்த விஷ்ணுவை மனதுள் நினைத்தாலே மனிதன் எல்லா க்ஷேமங்களுக்கும் இருப்பிடமாக ஆகின்றானோ, பிறப்பிறப்பில்லாத எங்கும் நிறைந்த அந்த விஷ்ணுவை நான் எப்பொழுதும் சரணமென்று அடைகிறேன்.

### சாந்தி மந்திரங்கள் 10

1. **शं नो मित्रः** ப்ராணனையும் பகல் வேளையையும் அபிமானிக்கு மித்ரர் என்னும் தேவதை நமக்கு ஸுகத்தைக் கொடுக்கட்டும்.

**वरुणः** அபானனையும் இரவு வேளையையும் அபிமானிக்கும் வருணரென்னும் தேவதை நமக்கு ஸுகத்தைக் கொடுக்கட்டும்.

**शं नो भवत्वर्यमा** கண்ணையும், ஸூர்ய மண்டலத்தையும் அபிமானிக்கும் அர்யமா என்னும் தேவதை நமக்கு ஸுகத்தைக் கொடுக்கட்டும்.

**शं न इन्द्रः** பலத்தை அபிமானிக்கும் தேவராஜனான இந்திரன் நமக்கு ஸுகத்தைக் கொடுக்கட்டும்.

**बृहस्पतिः** வாக்கையும் புத்தியையும் அபிமானிக்கும் தேவ குருவான பிருஹஸ்பதி நமக்கு ஸுகத்தைக் கொடுக்கட்டும்.

**शं नो विष्णुरुरुक्रमः** பாதங்களை அபிமானிக்கும் த்ரிவிக்ரமா வதார மெடுத்த விஷ்ணு நமக்கு ஸுகத்தைக் கொடுக்கட்டும்.

**नमो ब्रह्मणे** ப்ரஹ்மத்தை நமஸ்கரிக்கிறேன்.

**नमस्ते वायो** ஸூத்ரமெனப்படும் வாயுபகவானே! நான் உன்னை நமஸ்கரிக்கிறேன்.

**त्वमेव प्रत्यक्षं ब्रह्मासि** நீயே பஞ்ச விருத்தி ப்ராண ரூபமாய் மற்ற வற்றைக் காட்டிலும் ப்ரத்யக்ஷ ப்ரஹ்மமாக இருக்கிறாய்.

**त्वामेव प्रत्यक्षं ब्रह्म वदिष्यामि** ஆகவே ப்ரத்யக்ஷ ப்ரஹ்ம ரூப மாக உன்னையே நான் பேசப்போகிறேன்.

**ऋतं वदिष्यामि** மனதுள் நினைக்கும் உண்மை நீயே எனச் சொல்லப் போகிறேன்.

**सत्यं वदिष्यामि** வெளியே பேசப்படும் உண்மை நீயே எனப் பேசப்போகிறேன்.

**तन्मामवतु** அந்த ப்ரஹ்மம் வித்யையைக் கொடுத்து என்னைக் காக்கட்டும்.

**तद्वक्तारमवतु** அந்த ப்ரஹ்மம் எனக்கு வித்யோபதேசம் செய்யும் ஆசார்யனையும் போதிக்கும் திறனைக் கொடுத்துக் காக்கட்டும்.

**अवतु माम्, अवतु वक्तारम्** என்னை காப்பாற்றட்டும், என் ஆசார்யனைக் காப்பாற்றட்டும்.

**ओम् शान्तिः शान्तिः शान्तिः** ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: (ஒவ் வொரு மந்திரத்தின் முடிவிலும் இப்படி மூன்று முறை சொல்ல வேண்டும்) ஆத்யாத்மிகம், ஆதி பௌதிகம், ஆதிதைவிகம் என்ற மூவகை இடை

யூறுகள் சாந்தியை அடையட்டும். அதற்காகவே மூன்று முறை **शान्तिः** என்ற பதம் உச்சரிக்கப்படுகின்றது.

2. **सह नाववतु** ஆசார்யன், சிஷ்யன் என்னும் எங்களிருவரையும் ப்ரஹ்மம் காப்பாற்றட்டும்.

**सह नौ भुनक्तु** வித்யாபலத்தை நாங்களிருவரும் அனுபவிக்கும்படி செய்யட்டும்.

**सह वीर्यं करवावहै** வித்யாபலத்திற்காக நாங்கள் இருவருமே பெருமுயற்சி செய்கிறோம்.

**तेजस्वि नावधीतमस्तु** எங்களுடைய வித்யை ப்ரகாசமுள்ளதாய், வீர்யமுள்ளதாய் இருக்கட்டும்.

**मा विद्विषावहै** நாங்கள் இருவரும் ஒருவொருக்கொருவர் எக்காரணம் கொண்டும் துவேஷமில்லாதவர்களாக இருக்கவேண்டும்.

3. **यश्छन्दसामृषभः** எந்த ப்ரணவாக்ஷரம் வேதங்களுள் மிகச்சிறந்ததாகக் கருதப்படுகின்றதோ,

**विश्वरूपः** எல்லாப் பொருள்களாயு மிருக்கின்றதோ,

**छन्दोभ्योऽध्यमृतात्संबभूव** வேதங்களெனப்படும் அமிருதத்திலிருந்து லோகங்கள், தேவர்கள், வேதங்கள், வ்யாஹ்ருதிகள் என்ற முறைப்படி முடிவில் சிறந்ததாக ப்ரஹ்மதேவனால் தேர்ந்தெடுக்கப்பட்டு வெளிப்படுத்தப்பட்டதோ,

**स मेन्द्रो मेधया स्पृणोतु** எல்லாவற்றையும் கொடுக்க வல்லதான அந்த ப்ரணவாக்ஷரம் ப்ரஹ்மவித்யை யெனப்படும் மேதையோடு என்னைச் சேர்த்து வைக்கட்டும்.

**अमृतस्य देव धारणो भूयासम्** ஓ தேவனே, மோக்ஷத்திற்குக் காரணமான ப்ரஹ்மவித்யையை நான் அடைந்தவனாக ஆகவேண்டும்.

**शरीरं मे विचर्षणम्** இந்த என் உடம்பு அந்த வித்யையைப் பெற்றுத்தரும் தகுதியுடையதாக ஆகட்டும்.

**जिह्वा मे मधुमत्तमा** இந்த என் நாக்கு இனிமையான பேச்சுக்களையே பேசுவதாக இருக்கட்டும்.

**कर्णाभ्यां भूरि विश्रुवम्** இந்த என் காதுகளால் ப்ரஹ்மவித்யை யைப்பற்றிய விஷயங்களையே அதிகமாகக் கேட் கிறேன்.

**ब्रह्मणः कोशोऽसि** நீயே ப்ரஹ்மத்தை அறியும் இடமாக இருக்கின்றாய்.

**मेधया पिहितः** உலக அறிவால் உன் உண்மை ஸ்வரூபம் மறைக்கப் பட்டிருக்கின்றது.

**श्रुतं मे गोपाय** நான் கேட்டு உணர்ந்ததை மறந்துபோகாமல் நீ காப்பாற்றவேண்டும்.

4. **अहं वृक्षस्य रेरिवा** விருக்ஷம்போன்று நசிக்கும் தன்மை யுள்ள இந்த உலகிற்கு அந்தர்யாமியாயிருந்து கொண்டு நானே ப்ரேரகனாயிருக்கிறேன்.

**कीर्तिः पृष्ठं गिरेरिव** மலையின் பெரிய பாறைபோன்று அசைக்க முடியாத நிலையான கீர்த்தி என்னால் அடையப் பட்டு விட்டது.

**ऊर्ध्वपवित्रो वाजिनीव स्वमृतमस्मि** சூரிய மண்டலத்தில் ப்ரகாசிக் கும் நிலையான பரிசுத்தமான எனது ப்ரஹ்மத் தன்மையை நான் அடைந்தவனாக இருக்கிறேன்.

**द्रविणँ सवर्चसम्** ஸுகத்திற்கு காரணமான ஸுவர்ண மென் னும் திரவியம் போன்று ப்ரகாசமான என் ஸ்வரு பத்தை அல்லது அதை அடையக்காரணமான ஞானத்தை யடைந்துவிட்டேன்.

**सुमेधाः** நல்லறிவு உள்ளவனாக இருக்கிறேன்.

**अमृतोक्षितः** அழிவற்றவனாக, குறைவற்றவனாக அல்லது அம்ருதத்தினால் நனைக்கப்பட்டவனாக இருக் கிறேன்.

**इति त्रिशंकोर्वेदानुवचनम्** இது ஞானத்தைப்பெற்று, பின் திரிசங்கு என்னும் மகரிஷியினிட மிருந்து தோன்றிய வசனமாகும்.

5. **पूर्णमदः** ப்ரஹ்மம் பூர்ணமானதே.

**पूर्णमिदं** ப்ரத்யக்சைதன்யமும் பரிபூரணமானதே.

**पूर्णात्पूर्णमुदच्यते** பூர்ணமான ப்ரஹ்மத்திலிருந்து பூர்ணமான ப்ரத்யக்சைதன்யம் அறியாமையால் வேறுபட்டது போல் தோன்றுகிறது.

**पूर्णस्य पूर्णमादाय पूर्णमेवावशिष्यते** பின்னர் அறிவினால் பூர்ண மான தனது பூர்ணத் தன்மையை உணர்ந்து திரும் பவும் பெற்று பூர்ணமாகவே மிஞ்சி நிற்கின்றது.

6. **आप्यायन्तु ममांगानि वाक् प्राणश्चक्षुः श्रोत्रमथो बलमिन्द्रियाणि च सर्वाणि** வாக்கு, ப்ராணன், கண், காது, பலம் மற்றுமுள்ள எல்லா இந்திரியங்கள் போன்ற எனது அவயவங்கள் எப்பொழுதும் திருப்தியடைந்தவை களாகவே இருக்கட்டும்.

**सर्वं ब्रह्मौपनिषदं** உபநிஷத் ப்ரதிபாத்யமான ப்ரஹ்மமே எல்லா உலகமும்.

**माहं ब्रह्म निराकुर्यां** நான் ப்ரஹ்மத்தை ஒரு பொழுதும் நிரா கரிக்க மாட்டேன்.

**मा मा ब्रह्म निराकरोत्** ப்ரஹ்மமும் ஒருபொழுதும் என்னை நிராகரிக்கக் கூடாது.

**अनिराकरणमस्तु । अनिराकरणम् मे अस्तु** இந்த இருவிதமான நிரா கரண மின்மையும் எப்பொழுதும் எனக்கிருக்க வேண்டும்.

**तदात्मनि निरते य उपनिषत्सु धर्मास्ते मयि सन्तु ते मयि सन्तु** ஆத்மா வின் உண்மை ஸ்வரூபமான ப்ரஹ்ம ஸ்வரூபத் தையறிந்து அடைய விரும்பும் என்னிடம் ஆத்ம தர்மங்களாக உபநிஷத்துக்களில் கூறப்பட்டுள்ள எல்லா தர்மங்களும் தோன்றட்டும்.

7. **वाङ्मे मनसि प्रतिष्ठिता** என் மனதால் நான் சொல்லவேண்டு மென்று நினைப்பதையே என் வாக்கு சொல்லட்டும்.

**मनो मे वाचि प्रतिष्ठितम्** என்வாக்குச் சொல்லவேண்டியதையே என் மனது நினைக்கட்டும்.

**आविरावीर्म एधि** பிரகாசமான ப்ரஹ்மம் எனக்கு பிரகாசிக் கட்டும்.

**वेदस्य म आणीस्थः** மனதும் வாக்கும் வேதங்களை என்னிடம் கொண்டு வரட்டும்.

**श्रुतं मे मा प्रहासीः** கேட்டு நான் அடைந்த ஞானம் என்னை விட்டுப் போகாமலிருக்கட்டும்.

**अनेनाधीतेन अहोरात्रान् सन्दधामि** இரவும் பகலும் இந்த அறிவையே தொடர்ந்து அனுஸந்தானம் செய்து கொண்டிருக்கிறேன்.

ऋतं वदिष्यामि மனதில் உண்மையையே நினைக்கிறேன்.

सत्यं वदिष्यामि வெளியில் உண்மையையே பேசுகிறேன்.

तन्मामवतु அது (ப்ரஹ்மம்) என்னைக் காப்பாற்றட்டும்.

तद्वक्तारमवतु அது என் ஆசார்யனைக் காப்பாற்றட்டும்.

अवतु माम् என்னைக் காப்பாற்றட்டும்.

अवतु वक्तारम्। अवतु वक्तारम् என் ஆசார்யனைக் காப்பாற்றட்டும், என் ஆசார்யனைக் காப்பாற்றட்டும். (ஆதரவை வெளிபடுத்த இந்த வாக்கியம் இரண்டு தரம் உச்சரிக்கப்படுகிறது).

8. भद्रं नोऽपि वातय मनः ஏ மனமே, எம்பொருட்டு க்ஷேமத்தை வரும்படிச் செய்.

9. भद्रं कर्णेभिः शृणुयाम देवाः ஏ தேவர்களே, நல்ல விஷயங்களையே நாங்கள் காதுகளால் கேட்கவேண்டும்.

भद्रं पश्येमाक्षभिर्यजत्राः யஜ்ஞத்தினால் திருப்தியடையும் தேவர்களே, நல்ல விஷயங்களையே நாங்கள் கண்களால் பார்க்க வேண்டும்.

स्थिरैरंगैस्तुष्टुवाँ सस्तनूभिः ஸ்திரமான அவயவங்களோடு கூடிய சரீரங்களோடு நாங்கள் எப்பொழுதும் உங்கள் பெருமைகளை எடுத்துச் சொல்லிக்கொண்டிருக்க வேண்டும்.

व्यशेम देवहितं यदायुः அதிகமான ஆயுளை நாங்கள் பெற்றிருக்க வேண்டும்.

स्वस्ति न इन्द्रो वृद्धश्रवाः பெரும் புகழைப் பெற்றுள்ள இந்திரன் எங்களுக்கு க்ஷேமத்தைக் கொடுக்கட்டும்.

स्वस्ति नः पूषा विश्ववेदाः உலக ஸாக்ஷியான சூரியன் எங்களுக்கு க்ஷேமத்தைக் கொடுக்கட்டும்.

स्वस्ति नस्तार्क्ष्यो अरिष्टनेमिः கெடுதியைப் போக்கும் கருடன் எங்களுக்கு க்ஷேமத்தைக் கொடுக்கட்டும்.

स्वस्ति नो बृहस्पतिर्दधातु பிருஹஸ்பதி எங்களுக்கு க்ஷேமத்தைக் கொடுக்கட்டும்.

10. **यो ब्रह्माणम् विदधाति पूर्वम्** முதன் முதலில் எவர் ப்ரஹ்ம தேவனைப் படைக்கின்றாரோ,

**यो वै वेदांश्च प्रहिणोति तस्मै** எவர் அவருக்கு வேதங்களை யெல்லாம் உபதேசிக்கின்றாரோ,

**तँ ह देवमात्मबुद्धिप्रकाशं** ஆத்ம ஞானத்தை ப்ரகாசிக்கும்படி செய்யும் அந்த தேவனை,

**मुमुक्षुर्वै शरणमहं प्रपद्ये** மோக்ஷத்தையடைய விரும்பும் நான் சரணமாக அடைகிறேன்.

**ओम् नमो ब्रह्मादिभ्यो ब्रह्मविद्यासम्प्रदायकर्तृभ्यः वंशऋषिभ्यः** இன்று வரை தொடர்ந்து வரும் ஆத்மவித்யையின் உபதேசத் தொடர்ச்சிக்குக் காரணமான வித்யா வம்சத்துக்கு ரிஷிகளான ப்ரஹ்மா முதலான பரம குருக்களுக்கு நான் நமஸ்காரம் செய்கிறேன்.

**नमो महद्भ्यः** மற்றுமுள்ள பெரியோர்களை நான் நமஸ்கரிக்கிறேன்.

**नमो गुरुभ्यः** மற்றுமுள்ள குருக்களையும் நான் நமஸ்கரிக்கிறேன்.

**सर्वोपप्लवरहितः प्रज्ञानघनः प्रत्यगर्थो ब्रह्मैवाहमस्मि** எல்லா விதமான துன்பங்களற்றதும், அறிவு வடிவமானதும், எல்லா உடல்களுள்ளும் ஆத்மத் தன்மையிலுள்ளதுமான ப்ரஹ்ம தத்வமாகவே நான் எப்பொழுதுமிருக்கிறேன்.

**अधीहि भो भगवः, अधीहि भो भगवः** ஆயினும் அந்தத் தன்மையை நான் மறந்திருப்பதால் அதைப் பெரியோர்களான தாங்கள் எனக்கு ஞாபக மூட்டவேண்டும்.

...

பிறகு அன்று படிக்கவேண்டிய பாஷ்ய பங்க்திகளுள் சிறிதளவு படித்துவிட்டு எழுந்துநின்று கீழ்வரும் தக்ஷிணா மூர்த்தி அஷ்டகத்தின் சுலோகங்களுள் ஆதிமுதல் **देहं प्राणमपि** என்னும் சுலோகம் முடியவும் மற்றுமுள்ள வேறு சுலோகங்களையும் ஒவ்வொன்றாகச்சொல்லி ஒவ்வொன்றுக்கும் ஒரு நமஸ்காரம் செய்யவேண்டும்.

मौनव्याख्याप्रकटितपरब्रह्मतत्त्वं युवानं
वर्षिष्ठांतेवसदृषिगणैरावृतं ब्रह्मनिष्ठैः ।
आचार्येन्द्रङ्करकलितचिन्मुद्रमानन्दमूर्तिं
स्वात्मारामं मुदितवदनं दक्षिणामूर्तिमीडे ॥

மௌனத்தினாலேயே ப்ரஹ்மத்தின் உண்மை ஸ்வ ரூபத்தை உபதேசித்தவரும், சிறு பிராயமுள்ளவரும் ப்ரஹ்ம நிஷ்டர்களான முதிர்ந்த வயதுள்ள மகரிஷிகளின் கூட்டங் களால் சூழப்பெற்றவரும், ஆசிரியர்களுள் மிகச்சிறந்த வரும், சின்முத்திரையைக் கையில் கொண்டவரும், ஆனந்தத்தையளிக்கும் தோற்றமுள்ளவரும், தன் ஸ்வ ரூபத்திலேயே ரமிப்பவரும், சிரித்த முகத்துடன் கூடிய வருமான தெற்கு நோக்கி வீற்றிருக்கும் ஸ்ரீதக்ஷிணா மூர்த்தியை நான் துதிக்கிறேன்.

विश्वं दर्पणदृश्यमाननगरीतुल्यं निजान्तर्गतं
पश्यन्नात्मनि मायया बहिरिवोद्भूतं यथा निद्रया ।
यस्साक्षात्कुरुते प्रबोधसमये स्वात्मानमेवाद्वयं
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥ १ ॥

(1) கண்ணாடியினுள் உண்மையில் இல்லாமலேயே இருப்பது போல் தோன்றும் ஒரு பட்டணத்தின் பிம்பத்திற்கு ஒப்பாகவும், தூக்கத்தில் உள்ளே காணும் உலகத்தையே வெளியில் காணுவது போல, தன்னுள் உண்மையில் இல்லாமலேயே இருப்பதாகவும் தோன்றும் இவ்வுலகத்தை மாயையின் மயக்கத்தால் வெளியில் இருப்பது போல் பார்த்து அனுபவித்துக் கடைசியில் ஆத்ம ஞானம் என்னும் விழிப்பை அடையும்போது இவ்வுலகமற்று தன்னை மட்டுமே உணர்ந்து கொள்ளும் ஆதிகுருவான ஸ்ரீதக்ஷிணா மூர்த்திக்கு இந்த என் நமஸ்காரமானது இருக்கட்டும்.

बीजस्यान्तरिवाङ्कुरो जगदिदं प्राङ्निर्विकल्पं पुनः
मायाकल्पितदेशकालकलनावैचित्र्यचित्रीकृतम् ।
मायावीव विजृम्भयत्यपि महायोगीव यः स्वेच्छया
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥ २ ॥

(2) ஒரு முளையானது தனது தோற்றத்திற்குமுன் யாதொரு விசேஷத் தன்மையுமின்றி வித்துக்குள்ளிருந்து பின்பு கிளை, இலை, பூ, காய், பழம் என்ற விசித்திரமான தன்மையடைவது போல, இந்த உலகமும் தனது தோற்றத் திற்குமுன் யாதொரு விசேஷத்தன்மையுமின்றி அவ்யாக்ருத மெனப்படும் தனது வித்துக்குள்ளிலிருந்து பின்பு மாயை யினாலேயே தோற்றுவிக்கப்பட்ட தேசம் காலம் போன்ற பல பொருள்களினால் விசித்திரமான தன்மையை அடை கின்றது. உண்மையிலில்லாத பொருள்களை தன்னிஷ்டம் போல் தோற்றுவிக்கும் மாயாவி போன்றும், பெரிய யோகி போன்றும், உண்மையிலில்லாத இவ்வுலகத்தைத் தோற்று விக்கும் ஆதிகுருவான ஸ்ரீதக்ஷிணாமூர்த்திக்கு இந்த நமஸ் காரமானது இருக்கட்டும்.

यस्यैव स्फुरणं सदात्मकमसत्कल्पार्थगं भासते
साक्षात्तत्वमसीति वेदवचसा यो बोधयत्याश्रितान् ।
यत्साक्षात्कारणाद्भवेन्न पुनरावृत्तिर्भवाम्भोनिधौ
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥ ३ ॥

(3) எந்த தக்ஷிணாமூர்த்தியின் உண்மையான இருக் கும் தன்மையே, உண்மையில் இல்லாமலேயே இருப்பது போல் தோன்றும் இவ்வுலகத்திலுள்ள ஒவ்வொரு பொரு ளிலும் இருப்பதுபோல் தோன்றுகிறதோ, எந்த தக்ஷிணா மூர்த்தி தன்னையணுகிவரும் சிஷ்யர்களுக்கு "நீங்கள் ஒவ்வொருவரும், எந்த ப்ரஹ்மஸாக்ஷாத்காரத்தால் திரும் பவும் இந்த ஸம்ஸாரமென்னும் கடலில் பிறவி ஏற்படாதோ, உண்மையில் அந்த ப்ரஹ்மஸ்வரூபமானவர்களே" என்ற உண்மையைத் 'தத்வமஸி' என்னும் வேதவசனத்தால் நேரிடையாகவே உபதேசிக்கிறாரோ, ஆதிகுருவான அந்த ஸ்ரீதக்ஷிணாமூர்த்திக்கு இந்த என் நமஸ்காரமானது இருக் கட்டும்.

नानाच्छिद्रघटोदरस्थितमहादीपप्रभाभास्वरं
ज्ञानं यस्य तु चक्षुरादिकरणद्वारा बहिः स्पन्दते ।
जानामीति यमेव भान्तमनुभात्येतत्समस्तं जगत्
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥ ४ ॥

(4) அநேக த்வாரங்களைக் கொண்ட ஒரு பானையினுள் வைக்கப்பட்ட பெரியதொரு தீபத்தின் ஒளி போன்று கண் முதலான கரணங்களென்னும் துவாரங்களைக் கொண்ட இந்த சரீரத்திற்குள் வைத்தது போலிருக்கும் ஞான வடிவமான எவரது ஒளியானது 'பார்க்கிறேன், கேட்கிறேன்,' என்னும் வகையில் வெளிவந்து பிரகாசிக்கின்றதோ, எவருடைய ஸ்வயம்ப்ரகாசத் தன்மையினாலேயே இவ்வுலகமனைத்தும் பிரகாசிக்கின்றதோ, ஆதிகுருவான அந்த ஸ்ரீதக்ஷிணாமூர்த்திக்கு இந்த என் நமஸ்காரமானது இருக்கட்டும்.

देहम्प्राणमपीन्द्रियाण्यपि चलां बुद्धिं च शून्यं विदुः
स्त्रीबालान्धजडोपमास्त्वहमिति भ्रान्ता भृशं वादिनः ।
मायाशक्तिविलासकल्पितमहाव्यामोहसंहारिणे
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥ ५ ॥

(5) ஸ்த்ரீகள், குழந்தைகள், குருடர்கள், மூடர்கள் இவர்களுக்கு ஒப்பாக மிக்க மதிமயக்கத்தையடைந்துள்ள பற்பல வாதிகள் உண்மையில் ஆத்மாவாக இல்லாத தேகம் ப்ராணன், இந்திரியம், க்ஷணிகவிஜ்ஞானம், சூன்யம் இவற்றையே அஹம் என உணரப்படும் ஆத்மாவாகக் கூறுகிறார்கள். சக்தி வாய்ந்த மாயையினால் தோற்றுவிக்கப் பட்ட இத்தகைய மயக்கத்தையெல்லாம் தனது உபதேசத் தினால் போக வைக்கும் வல்லமையுள்ள ஆதிகுருவான ஸ்ரீ தக்ஷிணாமூர்த்திக்கு இந்த என் நமஸ்காரம் இருக்கட்டும்.

श्रुतिस्मृतिपुराणानामालयं करुणालयम् ।
नमामि भगवत्पादशङ्करं लोकशङ்करम् ॥

ச்ருதிகள் (நான்கு வேதங்கள்), ஸ்ம்ருதிகள் (பதினெட்டு வகையான தர்மசாஸ்திரங்கள்), புராணங்கள் பதினெட்டு, இவற்றிற்கெல்லாம் இருப்பிடமானவரும், கருணைக்கு இருப்பிடமானவரும், ஸர்வலோகங்களுக்கும் க்ஷேமத்தையே கொடுப்பவரும் ('சங்கரோ லோகசங்கர:' என்னும் எனது கட்டுரை இங்கு காணத்தகும்) பகவத்பாதர் என எல்லோராலும் பெருமையுடன் அழைக்கப்படுபவருமான ஸ்ரீ ஆதிசங்கரரை நமஸ்கரிக்கிறேன்.

शङ्करं शङ्कराचार्यं केशवं बादरायणम् ।
सूत्रभाष्यकृतौ वन्दे भगवन्तौ पुनःपुनः ॥

வேதாந்தங்களுக்கு ('ஸூத்ரபாஷ்யக்ருதௌ வந்தே' என்னும் எனது கட்டுரை இங்கு காணத்தகும்) ஸூத்திரங்களையும் பாஷ்யங்களையும் எழுதி உலகத்திற்கு உபகாரஞ் செய்துள்ள பகவத் ஸ்வரூபர்களான, அதாவது சிவாவதாரமான ஸ்ரீ சங்கராசார்யரையும், விஷ்ணுவின் அவதாரமான, பதரியில் தவஞ்செய்தமையால் பாதராயணரென வழங்கப் பெறும் ஸ்ரீ வேத வ்யாஸார்யரையும் அடிக்கடி நமஸ்கரிக்கிறேன்.

नमः श्रुतिशिरःपद्मषण्डमार्तण्डमूर्तये ।
बादरायणसंज्ञाय मुनये शमवेश्मने ॥

தாமரைப்பூக்களுக்கு சூர்யன் போன்று, வேதாந்தங்களுக்கு மலர்ச்சியளித்தவரும், அடக்கத்திற்கு இருப்பிடமானவரும், பாதராயணர் என்ற பெயரைக் கொண்டவருமான மகரிஷிக்கு அதாவது வேத வியாஸாசாரியருக்கு நான் நமஸ்காரம் செய்கிறேன்.

ब्रह्मसूत्रकृते तस्मै वेदव्यासाय वेधसे ।
ज्ञानशक्त्यवताराय नमो भगवतो हरेः ॥

வேதாந்தஸூத்ரங்களை எழுதியவரும், முன் யுகங்களில் ஒன்றாகக் கலந்திருந்த வேதங்களை துவாபர யுகத்தின் முடிவில் உலகம் நன்மையடையக்கருதி நான்காகப் பிரித்துக் கொடுத்தவரும் ப்ரஹ்மாம்சம் பொருந்தியவரும், பகவானான விஷ்ணுவின் ஞான சக்தியின் அவதாரமாகத் தோன்றியவருமான அந்த வேத வ்யாஸரின் பொருட்டு நான் நமஸ்காரம் செய்கிறேன்.

शङ्कराश्लेषविलसदानन्दामृतनिर्भराम् ।
विश्वोत्तंसितपादाब्जां ब्रह्मविद्यां विभावये ॥

ஸ்ரீ சங்கரராலேயே தனது உண்மையான ஸ்வரூபம் உலகத்துக்கு நன்கு விளக்கப்பட்ட காரணத்தால், ஆனந்தத்தால் நிரம்பப் பெற்றதும், எல்லா உலகத்தாராலும் தலையில்

வைத்துக் கொண்டாடப் படுவதுமான ப்ரஹ்மவித்யையை எப்போதும் நான் நினைவு கொள்கிறேன்.

**वेदान्तनिकुरुम्बेण तात्पर्येण प्रकाशितः ।**
**स्वात्मानन्दैकरस्येन कल्याणाय शिवोऽस्तु नः ॥**

தனது ஸ்வரூபானந்தத்திலேயே மிக்க ஈடுபாடுள்ள வேதாந்தங்கள் யாவற்றாலும் உள்நோக்குடன் விளக்கப் பட்டுள்ள சிவஸ்வரூபமான உண்மைப் பொருள் நமக்கு மங்களங்களைக் கொடுக்கட்டும்.

**नारायणं पद्मभुवं वसिष्ठं शक्तिं च तत्पुत्रपराशरं च ।**
**व्यासं शुकं गौडपदं महान्तं गोविन्दयोगीन्द्रमथाऽस्य शिष्यम् ॥**
**श्रीशङ्कराचार्यमथाऽस्य पद्मपादं च हस्तामलकं च शिष्यम् ।**
**तं तोटकं वार्तिककारमन्यानस्मद्गुरून् सन्ततमानतोऽस्मि ॥**

மகாவிஷ்ணு, ப்ரஹ்மா, வஸிஷ்டர், சக்தி, அவருடைய புத்திரரான பராசரர், வ்யாஸர், சுகர், கௌடபாதர், அவருடைய சிஷ்யரான மஹானான கோவிந்தயோகி, அவருடைய சிஷ்யரான ஸ்ரீ சங்கராசார்யர், அவருடைய சிஷ்யர்களான பத்மபாதர், ஹஸ்தாமலகர், தோடகர், ஸ்ரீ சங்கரரின் தைத்திரீய பாஷ்யம், ப்ருஹதாரண்யக பாஷ்யம் போன்றவைக்கு வார்த்திகம் என்னும் உரை எழுதியருளிய ஸுரேச்வரர், மற்றுமுள்ள நம்முடைய வேதாந்த பூர்வாசார்யர்களை யெல்லாம் எப்பொழுதும் நமஸ்கரிக்கிறேன்.

**सदाशिवसमारम्भां भगवत्पादमध्यमाम् ।**
**अस्मदाचार्यपर्यन्तां वन्दे गुरुपरम्पराम् ॥**

சதாசிவத்தை துவக்கத்திலும் ஸ்ரீ சங்கரரை நடுவிலும் நமக்கு வித்யோபதேசம் செய்துவரும் சாக்ஷாத்குருவை முடிவிலும் கொண்டுள்ள வேதாந்த குருபரம்பரையை வணங்குகிறேன்.

**भाष्यं पठेत् । पाठानन्तरं पूर्ववत् दश शान्तिमन्त्राः पठनीयाः ।**

[பின்னர் பாஷ்யத்தை ச்ரவணம் செய்யவேண்டும், அதன் பின்னர் முன்போலவே பத்து சாந்தி மந்திரங்களையும் மறுபடியும் சொல்லி எழுந்து நின்று தக்ஷிணாமூர்த்தி

அஷ்டகத்தின் பின் பகுதியையும் மற்றுமுள்ள ச்லோகங் களையும் ஒவ்வொன்றாகச் சொல்லி ஒவ்வொன்றின் முடி விலும் நமஸ்கரிக்க வேண்டும்.]

राहुग्रस्तदिवाकरेन्दुसदृशो मायासमाच्छादनात्
सन्मात्रः करणोपसंहरणतो योऽभूत्सुषुप्तः पुमान् ॥
प्रागस्वाप्समिति प्रबोधसमये यः प्रत्यभिज्ञायते
तस्मै श्रीगुरुमूर्तये नम इद श्रीदक्षिणामूर्तये ॥ ६ ॥

(6) மாயையினால் மறைக்கப்பட்டிருப்பதால் தோற் றத்தில் ராகுவினால் க்ரஹிக்கப்பட்டுள்ள சூர்யனுக்கும் சந்திரனுக்கும் ஒப்பான வராகவும், கண் மனம் போன்ற உபகரணங்கள் ஒடுங்கி நிற்பதால் ஸுஷுப்தி என்னும் நிலையில் ஸந்மாத்திர ஸ்வரூபமாக பிராகாசிப்பவராகவும், பின்னர் விழிப்பு என்னும் நிலையில் முன்பு நான் சுக மாகத் தூங்கினேன் என்று உணர்பவராகவும் இருந்து வரும் ஆதி குருவான ஸ்ரீ தக்ஷிணாமூர்த்திக்கு இந்த என் நமஸ்கார மானது இருக்கட்டும்.

बाल्यादिष्वपि जाग्रदादिषु तथा सर्वास्ववस्थास्वपि
व्यावृत्तास्वनुवर्तमानमहमित्यन्तःस्फुरन्तं सदा ।
स्वात्मानं प्रकटीकरोति भजतां यो भद्रया मुद्रया
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥ ७ ॥

(7) பால்யம், கௌமாரம், யௌவனம், வார்தக்யம், ஜாக்ரத், ஸ்வப்னம், ஸுஷுப்தி மற்றுமுள்ள பலவிதமான அவஸ்தைகளும் ஒன்றன்பின் ஒன்றாக மாறி மாறிப் போனாலும் எல்லாவற்றிலும் மாறாமல் நான், நான் எனத் தொடர்ந்து உள்ளே ப்ரகாசித்துக் கொண்டிருக்கும் உண்மையான ஆத்மஸ்வரூபத்தைத் தன்னையணுகிய சிஷ்யர்களுக்கு மங்களகரமான தனது சின்முத்திரையினால் உபதேசிக்கும் ஆதி குருவான ஸ்ரீதக்ஷிணாமூர்த்திக்கு இந்த என் நமஸ்காரமானது இருக்கட்டும்.




विश्वं पश्यति कार्यकारणतया स्वस्वामिसम्बन्धतः
शिष्याचार्यतया तथैव पितृपुत्र्याद्यात्मना भेदतः ।
स्वप्ने जाग्रति वा य एष पुरुषो मायापरिभ्रामितः
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥ ८ ॥

(8) மாயையினால் மயக்கத்தையடைந்த புருஷனாக இருந்து கொண்டு உண்மையில் யாதொரு வேற்றுமையு மற்றதான இவ்வுலகத்தை காரியம் காரணம் என்றும், யஜமானன் சேவகன் என்றும், சிஷ்யன் ஆசார்யனென்றும், பிதா புத்ரனென்றும், இன்னும் பலவகையான வேற்றுமை யுள்ளதாக ஸ்வப்னத்திலும் விழிப்பிலும் பார்த்து அனுப வித்துக்கொண்டு இருக்கிற ஆதிகுருவான அந்த ஸ்ரீதக்ஷிணா மூர்த்திக்கு இந்த என் நமஸ்காரமானது இருக்கட்டும்.

भूरम्भांस्यनलोऽनिलोऽम्बरमहर्नाथो हिमांशुः पुमान्
इत्याभाति चराचरात्मकमिदं यस्यैव मूर्त्यष्टकम् ।
नान्यत्किंचन विद्यते विमृशतां यस्मात्परस्माद्विभोः
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥ ९ ॥

(9) அசையும் பொருள், அசையாப் பொருள் என வழங்கப் பெறும் உலகில் பூமி ஜலம் அக்னி காற்று ஆகாயம் சூர்யன் சந்திரன் யாகம் செய்யும் யஜமானன் என்ற இவை யெட்டும் எவருடைய மாயையால் ஏற்படும் தோற்றமே யன்றி உண்மையை ஆராயுமிடத்து வேறில்லையோ அந்த ஆதிகுருவான ஸ்ரீ தக்ஷிணாமூர்த்திக்கு இந்த என் நமஸ்காரம் இருக்கட்டும்.

सर्वात्मत्वमिति स्फुटीकृतमिदं यस्मादमुष्मिंस्तवे
तेनास्य श्रवणात्तदर्थमननाद्ध्यानाच्च सङ्कीर्तनात् ।
सर्वात्मत्वमहाविभूतिसहितं स्यादीश्वरत्वं स्वतः
सिद्ध्येत्तत्पुनरष्टधा परिणतं चैश्वर्यमव्याहतम् ॥ १० ॥

(10) இந்த ஸ்தோத்திரத்தில் ஸச்சிதானந்த லக்ஷண மான பரப்ரஹ்மம் என்னும் உண்மையான தத்வம் ஒன்றே, மாயாவசத்தால் நாம் காணும் எல்லாப்பொருளாக வும் தோன்றுகிறதே அன்றி, இவையெல்லாம் உண்மைப்

பொருள்களே அல்ல என்ற உபநிஷத்துகளின் தத்துவமே விளக்கப்பட்டிருப்பதால் இதைக் கேட்பவர் மனனம் செய்பவர் தியானிப்பவர் சொல்பவர் யாவர்க்குமே ஸர்வாத்மத்வம் என்றும், பெரிய விபூதியென்றும் கூறப் படும் ஈச்வரபாவமே ஏற்படும். அணிமா மஹிமா கரிமா லகிமா ப்ராப்தி ப்ராகாம்யம் ஈசத்வம் வசித்வம் எனப்படும் எட்டுவிதமான மற்றுள்ள விபூதிகளும் தடையின்றி தானாகவே கிட்டும்.

वटविटपिसमीपे भूमिभागे निषण्णं
सकलमुनिजनानां ज्ञानदातारमारात् ।
त्रिभुवनगुरुमीशं दक्षिणामूर्तिदेवं
जननमरणदुःखच्छेददक्षं नमामि ॥

ஆலமரத்தின் ஸமீபத்தில் பூமியில் உட்கார்ந்து கொண்டு எல்லா முனிவர்களுக்கும் ஞானோபதேசம் செய்த வரும், மூவுலகத்திற்கும் ஆதிகுருவும், தக்ஷிணாமூர்த்தி ஸ்வரூபத்திலிருப்பவரும் பிறப்பு என்னும் துக்கத்தை அகற்றுவதில் வல்லவரும் ஸ்வயம்பிரகாச ஸ்வரூபமானவரு மான ஈசனை நமஸ்கரிக்கிறேன்.

चित्रं वटतरोर्मूले वृद्धाश्शिष्या गुरुर्युवा ।
गुरोस्तु मौनं व्याख्यानं शिष्यास्तु छिन्नसंशयाः ॥

ஒரு ஆலமரத்தினடியில் வயதான விருத்தர்கள் சிஷ்யர்கள்; மத்யவயதானவர் ஆசார்யன். ஆசார்யன் வாய் திறந்து பேசாமலே தத்வோபதேசம் செய்கிறார். சிஷ்யர் களோ ஐயம் எதுவுமின்றி தெளிவாகவே உண்மையை உணர்கிறார்கள். இது ஆச்சரியத்திலும் ஆச்சரியம்.

अंगुष्ठतर्जनीयोगमुद्राव्याजेन देहिनाम् ।
श्रुत्यर्थं ब्रह्मजीवैक्यं दर्शयन्नोऽवताच्छिवः ॥

கட்டை விரலையும் ஆள்காட்டி விரலையும் ஒன்று சேர்ப்பதால் அமைக்கப்பெறும் சின்முத்திரையைக் காட்டும் முறையினாலேயே ஜீவனும் ப்ரஹ்மமும் உண்மையில் ஒன்றேயன்றி வேறில்லை என்ற வேதார்த்தத்தை ஜீவன்

களுக்கு எடுத்துக்காட்டும் சிவஸ்வரூபமான தக்ஷிணாமூர்த்தி நம்மைக் காப்பாற்றட்டும்.

ॐ नमः प्रणवार्थाय शुद्धज्ञानैकमूर्तये ।
निर्मलाय प्रशान्ताय दक्षिणामूर्तये नमः ॥

ஓம் என்னும் ப்ரணவத்தின் உட்பொருளாயும், மாசற்ற ஞானம் ஒன்றையே ஸ்வரூபமாகக் கொண்டவராயும், எப்பொழுதும் சுத்தராயும் சாந்தஸ்வரூபராயும் உள்ள தக்ஷிணா மூர்த்திக்கு பல நமஸ்காரங்கள்.

गुरवे सर्वलोकानां भिषजे भवरोगिणाम् ।
निधये सर्वविद्यानां दक्षिणामूर्तये नमः ॥

எல்லா உலகங்களுக்கும் குருவாகவும் பிறவி என்னும் பிணியைப் போக்கும் சிறந்த வைத்யராகவும் எல்லா வித்யைகளுக்கும் இருப்பிடமானவருமான தக்ஷிணா மூர்த்திக்கு நமஸ்காரம்.

चिद्घनाय महेशाय वटमूलनिवासिने ।
सच्चिदानन्दरूपाय दक्षिणामूर्तये नमः ॥

ஞானஸ்வரூபியாயும் எல்லோருக்கும் ஈசனாயும் ஆல மரத்தினடியில் இருப்பவராயும் ஸச்சிதானந்த ஸ்வரூபியாயுமுள்ள தக்ஷிணாமூர்த்திக்கு நமஸ்காரம்.

### மங்கள பாடம்

ப்ரதோஷ தினத்தன்று காலையில் இவற்றைப் படிக்க வேண்டும். உத்தரசாந்தி மந்த்ரங்களை ஜபித்த பிறகு ஒரு பிரதிமையிலோ புத்தக மண்டலத்திலோ சிஷ்யர்களோடு கூடின பகவத்பாதரை ஆவாஹனம் செய்து விதிப்படி பூஜை செய்து முடித்து கீழ்வரும் மங்கள பாடச்லோகங்களை ஜபித்து ஆசாரியன் சொல்லச் சொல்லி, பின்னர் தக்ஷிணாமூர்த்தி அஷ்டகத்தின் பின் பகுதியையும் மற்றுமுள்ள ச்லோகங்களையும் சொல்லி நமஸ்காரம் செய்ய வேண்டும்.

## மங்கள பாடச்லோகங்கள்

मङ्गलपाठश्लोकाः ।

1. अशुभानि निराचष्टे तनोति शुभसन्ततिम् ।
स्मृतिमात्रेण यत्पुंसां ब्रह्म तन्मंगलम् परम् ॥

நினைவில் கொண்ட மாத்திரத்தினாலேயே எந்த ப்ரஹ்மதத்வமானது எல்லா அமங்களங்களையும் போக்கி விடுகிறதோ, ஸர்வமங்களங்களையும் கொடுத்து விடு கிறதோ, அந்தப்ரஹ்மதத்வமே பரம மங்களகரமானதாகும்.

2. अतिकल्याणरूपत्वान्नित्यकल्याणसंश्रयात् ।
स्मर्तॄणां वरदत्वाच्च ब्रह्म तन्मंगलम् परम् ॥

மங்களங்களுக்கெல்லாம் மங்களமாயிருப்பதாலும் நித்யமங்களங்களுக்கெல்லாம் இருப்பிடமாயிருப்பதாலும் நினைப்பவர்களுக்கெல்லாம் இஷ்டங்களை கொடுப் பதாயிருப்பதாலும் அந்த ப்ரஹ்மமெனும் உண்மைத் தத்து வமே பரம மங்களகரமானதாம்.

3. ओङ्कारश्चाथशब्दश्च द्वावेतौ ब्रह्मणः पुरा ।
कण्ठं भित्वा विनिर्यातौ तस्मान्मांगलिकावुभौ ॥

ஓம் என்னும் ப்ரணவாக்ஷரம் அத என்னும் சப்தம் இவ்விரண்டும் முன்னொரு காலத்தில் ப்ரஹ்மாவினுடைய வாய் வழியில்லாமல் கழுத்தின் வழியாகவே வெளிப்பட்டு வந்ததால் உச்சிஷ்ட தோஷமில்லாத காரணத்தால் அவை யிரண்டும் மங்களகரமானவைகளாகும்.

ओम् अथ, ओम् अथ, ओम् अथ ।

அக்காரணம் பற்றியே அவையிரண்டும் மூன்று தடவை முடிவில் உச்சரிக்கப்படுகின்றன.

இதன் பின்னரே இன்று மட்டும் 'ராஹூக்ரஸ்த' என்று தொடங்கும் தக்ஷிணாமூர்த்யஷ்டகச்லோகம் முதலான ச்லோகங்களையும் மற்றுமுள்ள ச்லோகங்களையும் சொல்லி நமஸ்காரம் செய்ய வேண்டும்.

சுபம்

---